## கைத்தொழில் பாடசாலையின் அன்றைய தோற்றம்



BOYS LEARNING TAILORING AT NAZARETH, TINNEVELLY.



ART CLASS AT NAZARETH, TINNEVELLY.

தொகுப்பு:- பேரா. P. குட்டி ஜேஸ்கர், நாசரேத்.



## இன்று உயர்ந்தோங்கி நிற்கும் நாசரேத் தூய யோவான் பேராலயத்தின் அன்றைய சாண்பத்து ஆலயத்தின் தோற்றம்



சாண்பத்து என்ற குக்கிராமம் மூக்குப்பேரி மற்றும் வாழையடி ஆகிய இரு கிராமங்களுக்கு இடையில் இருந்தது. 8 குடும்பங்கள் மட்டுமே வசித்த இக்குக்கிராமம் மிஷனெரிகளின் வரவால் 35 குடும்பங்களாக வளர்ச்சி யடைந்து **"முதல் ஆதி சபை"** ஸ்தாபிக்கப்பட்டது. 1800இல் கிறிஸ்தவ கிராமம் என்று பெயர் சூட்டப்பட்டது. சாண்பத்து கிராமத்தார் 1803 வரை தங்களை வடக்கு முதலூரார், வாழையடி முதலூரார் என்றே அழைத்தனர். 1803ஆம் ஆண்டின் பிற்பகுதியில் நாசரேத் என்று அழைக்கப் படலாயிற்று. ஓர் ஊர் முழுவதும் புற மத மார்க்கத்தை விட்டு கிறிஸ்தவ மார்க்கத்தை ஏற்றதில் முன்மாதிரியான முதல் ஊர் நாசரேத் என்பது உலக வரலாறு ஆனது.

## மிஷனெரிகளின் சுவடுகள்

### கனம் டேவிட் ரோசன் : (1829-1830)



நாசரேத்தில் புதிய ஆலயம் கட்ட வேண்டும் என்ற நோக்கத்திலேயே அதற்குரிய எஸ்டிமேட், பிளானுடன் 1829-ஆம் ஆண்டு டிசம்பர் 23-ஆம் நாள் நாசரேத் வந்தார். அன்னாரின் அரும்பணியால் நாம் காணும் இந்த பேராலயத்தின் முந்தைய தேவாலயம் 31.12.1829இல் அஸ்திபாரம் போடப்பட்டு சுமார் 11 மாதங்களில் கட்டி முடிக்கப்பட்டு 20.11.1830இல் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அக்காலத்தில் இந்தியாவின் மிகப்பெரிய தேவாலயம் என்ற பெயருடன் திகழ்ந்தது.

### கனம் இரியன் : (1836-1838)

1836ஆம் ஆண்டு நாசரேத்தில் தங்கி பணியாற்ற நியமிக்கப்பட்ட முதல் மிஷனெரி ஆவார். இவர் நாசரேத் வந்ததும் முதல் கட்டமாக செய்தது மிஷனெரிகள் தங்கி ஊழியம் செய்ய ஒரு பங்களா கட்டியதே ஆகும். இந்த பங்களாதான் இன்றுவரை மர்காஷிஸ் மேல்நிலைப்பள்ளி வளாகத்தில் உள்ளது. தற்போது அதனை பழமை மாறாது புதுப்பிக்க முயற்சி எடுத்து வருகின்றனர். இவர் தனது நாட்குறிப்பேட்டில் நாசரேத் மக்களைப் பற்றி, கெட்ட பழக்க வழக்கம் இல்லாதவர்கள், பொல்லாப்பை அனுமதிக்காத வர்கள், தவறு செய்தால் கண்டனத்தை ஏற்றுக் கொண்டு கீழ்ப்படிபவர்கள், ஆலய ஆராதனைக்கு ஒழுங்காக வருபவர்கள் என்று குறிப்பிட்டுள்ளார்.

### கனம் கேமரர் : (1838-1858)

கேமரர் ஐயர் அவர்களின் 20 ஆண்டு கால ஊழிய பாதையில் பல புதிய சபைகள் தோன்றின. கடையனோடை, புன்றிமடல்(தங்கையாபுரம்), அகப்பைக்குளம் அவற்றுள் சில எனலாம். இவரது ஊழிய காலத்தில்தான் 7.1.1841 அன்று முதல் திடப்படுத்தல் ஆராதனை சென்னை பேராயர் ஸ்பென்சர் அவர்களால் நடத்தப்பட்டது. ஏரலில் தோன்றிய விபூதிச் சங்கத்தினரிடமிருந்து நாசரேத் மக்களைக் காப்பாற்றிய பெருமை கேமரர் ஐயா அவர்களையேச் சாரும். 1858இல் நாசரேத்தை விட்டுச் சென்றபின் 3 ஆண்டுகள் தஞ்சாவூரில் பணியாற்றி, 1862இல் ஓய்வு பெற்று தரங்கம்பாடியில் தனது பிந்தைய வாழ்நாட்களைச் செலவிட்டார். தனது 87வது வயதில் தரங்கம்பாடியில் 02.09.1891ஆம் ஆண்டு மறுமைக்குட்பட்டார்.

### அனி கேமரர் : (1838-1849)

கேமரர் ஐயர் அவர்களின் துணைவியரான இவர் தனது கணவருடன் வீடு வீடாகச் சென்று பெற்றோரைக் கண்டு, பெண் கல்வியின் அவசியத்தை எடுத்துரைத்து, பெண் பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்ப வேண்டுமென்று மன்றாடினர். 1843இல் நாசரேத்தில் பெண்கள் பள்ளி ஆரம்பிக்கப்பட்டு, பள்ளியின் முதல் தலைமை ஆசிரியை ஆனார். 1848இல் மூக்குப்பேரியிலும் பெண்கள் பள்ளியை ஏற்படுத்தினார்கள். அதே ஆண்டில் நாசரேத் பெண்கள் பள்ளியில் போர்டிங்கை அமைத்தார்கள். 15.09.1849 இல்28ஆம் வயதில் திடீரென மறுமைக்குட்பட்டார்கள். அன்னாரின் கல்லறை இன்றளவும் நாசரேத் தேவாலய வளாகத்தில் உள்ளது.

### கனம் பிரதர்ட்டன் : (1859-1869)

இங்கிலாந்து நாட்டிலிருந்து 1860இல் தன் குடும்பத்துடன் நாசரேத் வந்தார். சுவிசேஷ பணியே இவரின் பிரதான பணி. மாதம் 20 நாட்கள் வெளியூர் சென்று சுவிசேஷ பணி செய்வார். 1860இல் வீடுகளில் வாரந்தோறும் ஜெபக்கூட்டங்களை ஏற்பாடு செய்தார். இந்த கூட்டங்கள் தான் இன்று தொகுதி ஜெபக்கூட்டங்களாக தொடர்ந்து வருகிறது. சபைகளில் சங்கக் காணிக்கை, அரிசிக்

காணிக்கை படைக்கும் பழக்கத்தை ஏற்படுத்தியவர் இவரே. கனம் பிரதர்ட்டன் அவர்கள் 1869ஆம் ஆண்டு மறுமைக் குட்பட்டு தேவாலய வளாகத்துள் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

**கனம் ஸ்ட்ராஹன் : (1870-1876)**



இங்கிலாந்து தேசத்திலிருந்து இந்தியாவிற்கு இறை தொண்டு புரிய வந்த இவர், மக்களுக்கு இறைபணியோடு, மருத்துவ பணியும் இன்றியமையாதது என்பதை உணர்ந்து மீண்டும் இங்கிலாந்து சென்று மருத்துவம் படித்து 1870இல் நாசரேத்திற்கு மிஷனெரியாக வந்தார். முதல் காரியமாக மருத்துவமனை அமைத்தார். அந்த மருத்துவமனைதான் இன்று பரி.லூக்காவின் பெயரை தாங்கி அன்னாரின் ஊழியத்தை நிறைவேற்றி வருகிறது. 1871இல் 40,000 பேர்கள் அவரிடம் சிகிச்சை பெற்றனர் என்றால் அவரது பணியை நாம் என்னவென்று சொல்வது? 1872இல் தேவாலயத்தின் அருகில் 1 முதல் 4 தெருக்களும், முதன் முதலாக ஒரு கடையும் இவரது முயற்சியால் அமைக்கப் பெற்றன. அன்னாரது பெரு முயற்சியாலே 1872இல் செவ்வாய் சந்தையும், 1874இல் தபால் நிலையமும் நாசரேத்திற்கு வந்தது. பின் நாசரேத் – ஆழ்வார்திருநகரி பாதையை சீர்படுத்தி நாசரேத் வெளி உலகோடு தொடர்பு கொள்ள வழி செய்தார். 1786இல் சென்னை சாந்தோமுக்கு மாறுதலாகிச் சென்றார். பின்னர் இரங்கூன் சென்று அத்தியட்சராக 20 ஆண்டுகள் பணியாற்றினார்.

**கனம் வெஸ்ற்றன் : (1906-1912)**



கனம் ஆர்தர் மர்காஷிஸ் ஐயர் அவர்களுக்கு உதவியாக ஊழியம் செய்ய 1906ஆம் ஆண்டு நாசரேத் வந்தார். 1910 இல் பெண்கள் மேல்நிலைப்பள்ளியின் கட்டிடம் கட்டப்பட்டது. பரி. லூக்கா மருத்துவமனையில் அமைந்துள்ள வேதகலா சாலைக் கட்டிடம் கட்டப்பட்டது. 1908இல் வாலிப பெண்கள் ஐக்கிய சங்கமும், தொடர்ந்து வாலிப ஆண்கள் ஐக்கிய சங்கமும் அன்னாரின் காலத்தில் தொடங்கப்பட்டு ஊழியத்தைத் தொடர்ந்தது.

**கனம் ஸ்டேப்ளி : (1911-1924)**



1911இல் நாசரேத் இறையியல் கல்லூரி முதல்வரானார். 1912இல் நாசரேத் மிஷனெரியானார். 1915இல் பாலர் பண்டிகை ஆசரிப்பை ஆரம்பித்தார். மது ஒழிப்பு சங்கத்தை ஆரம்பித்தார். அன்னாரது பெரு முயற்சியால் நாசரேத் – சாத்தான்குளம் சாலை போடப்பட்டு நாசரேத் குட்டி நகரமானது, பஞ்சாயத்து ஆனது. 21.03.1923 முதல் ரயில் போக்குவரத்து ஆரம்பமானது. 26.05.1924 இல் தனது பணியை ராஜினாமா செய்து விட்டார்கள்.

**கனோன் கோயில்பிள்ளை : (1924-1932)**



சாயர்புரத்தில் பிறந்த கனோன் கோயில்பிள்ளை அவர்கள் 1909ஆம் ஆண்டு ஆப்பிரிக்காவில் பணியாற்றிய போது தேசத் தந்தை காந்தியடிகளின் நெருங்கிய நண்பராக இருந்தார். மெசபடோமியா நாட்டில் போயர் போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது போர்கள குருவாக பணியாற்றினார். கனம் ஸ்டேப்ளி ஐயர் அவர்களால் அஸ்திபாரம் போடப்பட்ட ஆலய பணி இவரால் சிறப்பாக நிறைவு பெற்றது. ஆலய கட்டுமானத்திற்கு SPG சங்கத்தார் உதவி அளித்தனர். அதற்குமேலாக நாசரேத் சபையார் ரூ. 20,000/- கொடுக்க முன்வந்தனர். 1923க்குள்

சுவர்களும், தூண்களும், அலங்கார ஆர்ச்சுகளும் கட்டி முடிக்கப்பட்டன. 1924இல் தட்டடி பணிகள் முடிக்கப்பட்டன. 1925இல் கோபுரத்தின் இரு தட்டுகள் கட்டி முடிக்கப்பட்டன. 1926இல் ஆலய பூச்சி வேலை முடிவுற்றது. 12.03.1928 அன்று காலை 7.30 மணிக்கு அன்றைய நெல்லைப் பேராயர் அருட்பெருந்திரு. நார்மன் டப்ஸ் அவர்களால் ஆலய பிரதிஷ்டை ஆராதனை நடத்தப்பட்டது. சுமார் 2500பேர் திருவிருந்தில் பங்கு பெற்றனர். 25 குழந்தைகள் ஞானஸ்நானம் பெற்றனர். தொடர்ந்து 4 நாட்கள் பண்டிகை ஆசரிக்கப்பட்டு 16.03.1928 அன்று அசனம் சிறப்பாக நடைபெற்றது. 1933–1934 ஆண்டுகளில் மேலும் ஆறு தட்டுகள் கட்டப்பட்டன.

நடுத்தரப் பள்ளியாக இருந்த மர்காஷிஸ் பள்ளியை உயர்நிலைப் பள்ளியாக்க முழு முயற்சி எடுத்து வெற்றி கண்டார். 1932ஆம் ஆண்டு முதல் இடையன்குடியில் தொடர்ந்து 10 ஆண்டுகள் பணியாற்றினார். 20.06.1942 அன்று நித்திய வாழ்விற்குள் சென்றார். அவரது உடல் இடையன்குடியில் அடக்கம்பண்ணப்பட்டது.

## நாசரேத்தின் முக்கிய ஆண்டுகள்

1. சாண்பத்துக் கிராமத்தார் கிறிஸ்தவர்களானது – 1799
2. சாண்பத்துக் கிராமம் வடக்கு முதலூரானது – 1800
3. வடக்கு முதலூர், நாசரேத் ஆனது – 1803
4. நாசரேத்தில் முதல் ஆலயம் கட்டப்பட்டது – 1803
5. முதல் குருவானவர் பொறுப்பேற்றது – 1819
6. முதலாவது ஆண்கள் பாடசாலை ஏற்பட்டது – 1819
7. முதலாவது பெண்கள் பாடசாலை ஏற்பட்டது – 1820
8. இரண்டாவது ஆலயம் கட்டப்பட்டது – 1830
9. நாசரேத்துக்கு முதலில் அத்தியட்சர் வந்தது – 1841
10. பெண்கள் போர்டிங் ஸ்கூல் ஏற்பட்டது – 1848
11. புதுக்குளம் வெட்டப்பட்டது – 1855
12. தெரு ஜெபக்கூட்டங்கள் ஆரம்பித்தது – 1860
13. அரிசிக்காணிக்கை ஏற்படுத்தப்பட்டது – 1868
14. முதல் மருத்துவமனை ஏற்பட்டது – 1870
15. முதல் பலசரக்குக்கடை உண்டானது – 1872
16. 1,2,3,4 ஆம் தெருக்கள் உண்டானது – 1872
17. செவ்வாய்கிழமை சந்தை ஏற்பட்டது – 1872
18. போஸ்ட் ஆபீஸ் ஏற்பட்டது – 1874
19. பெண்கள் டிரெயினிங் ஸ்கூல் ஏற்பட்டது – 1877
20. கைத்தொழில் பாடசாலையின் தோற்றம் – 1878
21. ஆண்கள் மிடில் ஸ்கூல் ஆரம்பமானது – 1882
22. பெண்கள் உயர்நிலைப் பள்ளி ஆரம்பமானது – 1886
23. நாசரேத் மருத்துவமனைக்கு பரி. லூக்கா ஆஸ்பத்திரி என்று பெயர் வந்தது – 1892
24. தந்தி ஆபீஸ் ஏற்பட்டது – 1894
25. இறையியல் கல்லூரி ஏற்பட்டது – 1900
26. தினந்தோறும் நற்கருணை ஏற்பட்டது – 1902
27. சாத்தான்குளம் ரோடு போடப்பட்டது – 1912
28. பஞ்சாயத்து போர்டு ஏற்பட்டது – 1922
29. கூட்டுறவு பாங்க் ஏற்பட்டது – 1923
30. ரெயில்வே ஸ்டேஷன் வந்தது – 1923
31. கஸ்பா எலிமெண்டரி பாடசாலை உதயம் – 1926
32. மர்காஷிஸ் உயர்நிலைப்பள்ளி உதயம் – 1930
33. டாக்டர் மதுரம் எலிமெண்டரி பாடசாலை உதயம் – 1935
34. ஆலயத்தில் மணிக்கெடிகாரம் அமைத்தது – 1950
35. போலீஸ் நிலையம் ஏற்பட்டது – 1955
36. நாசரேத்தில் மின்சாரம் வந்தது – 1955
37. மர்காஷிஸ் கல்லூரி ஆரம்பம் – 1967
38. கிண்டர் காட்டன் ஆங்கிலப் பள்ளி உதயம் – 1977
39. மர்காஷிஸ் மேல்நிலைப்பள்ளி ஏற்பட்டது – 1978
40. புனித யோவான் மகளிர் மேல்நிலைப்பள்ளி – 1978
41. நாசரேத் தூய யோவான் ஆலயப் பொன்விழா – 1978
42. நாசரேத் தூய யோவான் பேராலய பவளவிழா – 2003
42. தூய யோவான் பேராலயமானது – 2003